உ
கணபதி துணை



தெய்வப்புலமை ஔவையாரருளிச்செய்த

# கல்வி ஒழுக்கம்

## மூலமும் உரையும்


உரையாசிரியர் :

யாழ்ப்பாணம் – கரவெட்டி கிழக்கு,
உயர் சைவத்திரு
க. பொன்னம்பல உபாத்தியாயர்
அவர்கள்.



1968

உ
கணபதிதுணை

தெய்வப்புலமை ஔவையாரருளிச்செய்த

# கல்வி ஒழுக்கம்

## மூலமும்,

யாழ்ப்பாணத்து நல்லூர்
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களினதும்
வித்வசிரோமணி ஸ்ரீமத் ந. ச. பொன்னம்பலபிள்ளை
அவர்களினதும்
மாணுக்கர்கள் மாணுக்கரும்
இலங்கை அரசினர் பாடசாலைத்
தலைமை ஆசிரியருமாகிய
யாழ்ப்பாணம் கரவெட்டி கிழக்கு
உயர் சைவத்திரு
**க. பொன்னம்பல உபாத்தியாயர்**
அவர்களியற்றிய
**உரையும்.**

---

ஷை உரையாசிரியர் சகோதரர்
**திரு. க. குழந்தைவேலு, (R. M. P.)**
அவர்களால்
சுன்னுகம் திருமகள் அழுத்தகத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

 1968 [விலை : சதம் 50

முதற் பதிப்பு — ஆனி 1926
இரண்டாம் பதிப்பு — ,, 1968

கிடைக்குமிடர் :

1. **பதிப்பாசிரியர்**
   24/1, ரேகினிரேட், அல்லது கரவெட்டி கிழக்கு,
   கொழும்பு — 6. கரவெட்டி

2. **பொ. சிவராமலிங்கம்**
   "வேதவனம்"
   கொடிகாமம்.

---

சுன்னுகம், திருமகள் அழுத்தகத்தில் குரும்பசிட்டி, திரு. முத்தையா சபாரத்தினம் அவர்களால் அச்சிடப்பட்டு, கரவெட்டி கிழக்கு திரு. க. குழந்தைவேலு அவர்களால் வெளியிடப்பட்டது. — ஈ562/68

# இரண்டாம் பதிப்பின் தோற்றுவாய்



வெண்பா

பெற்ரேரின் பின்வணங்கும் பேதையேன் தெய்வமொன்று
உற்ரு லதுவென் னுயர்அண்ணன் — முற்ருகச்
செந்தமிழிற் றேர்ச்சியுறச் செப்பித் தமிழ்நூல்கள்
தந்தவன்ருள் சென்னிதொழுந் தாழ்ந்து.

எமது அருமைப் பேரக்குழந்தை ஒன்றின் ஐந் தாண்டு நிறைநாள் அணிவிழாவின்போது குழந்தைகளின் இளம் உள்ளத்திற் பதியும்வண்ணம் கல்வியின் சிறப்பைச் சொல்லிவைக்கவேண்டுமென்ற அவா எழுந்தது. 'இளமை யிற் கல்வி சிலையி லெழுத்து'. ஆத்திசூடி, கொன்றைவேந்தன் கற்குமுன் கல்வி ஒழுக்கம் சிறந்து பயன்படுமே என்ற எண்ணமும் எழுந்தது.

தெய்வப்புலமை ஔவையாரியற்றிய 'கல்வி ஒழுக்கம்' என்னும் இந் நூலினை எனது அருமை அண்ணர் உயர்சைவத் திரு. க. பொன்னம்பல உபாத்தியாயர் அவர்கள் பழைய ஏட்டுப் பிரதிகளிலிருந்து ஆராய்ந்தெடுத்தெழுதி ஒரு உரையுமியற்றி 1926ஆம் ஆண்டு ஆனி மாசம் அச்சிட்டு வெளியிட்டிருந்தார்கள். ஆனல், இந் நூற்பிரதி ஒன்றேனுங் கைவசமில்லாதிருந்தது. இதைக்குறித்து எனது அருமைப் பெருமகனும், இந்நூலுரையாசிரியரின் மூத்த மகனுமாகிய திரு. பொ. சிவராமலிங்கம் அவர்களிடம் கேட்டபோது அவர் தன்னிடமிருந்த ஒரே பிரதியினைத் தந்துதவினர்.

பின்பு, ஒருநாள் மட்டக்களப்பில் என் உறவினரும் உழுவல் நண்பருமாகிய பண்டிதர் ஆ. சபாபதி அவர்க ளுடன் உரையாடிக்கொண்டிருந்தபோது பேராசிரியர் துரைச்சாமிப்பிள்ளை எழுதிய ஒரு கட்டுரையில் 'ஔவை யார் கல்வி ஒழுக்கம் என்றெரு நூல் செய்திருப்பதாகக்

கேள்வி—அன்றி அதனைக் கண்டதில்லை—அதனை மேல்நாட்டறிஞர்கள் மொழிபெயர்த்திருப்பதாகவும் அறிகின்றேம்—இந்தியாவில் எங்கணும் பெற்றுக்கொள்ள அது கிடைக்கவில்லை' என எழுதியதைத் தான் படித்ததாகவும் உடன் பேராசிரியருக்குத் தான் பதில் எழுதியதாகவும் கூறித் தம்மிடமிருந்த ஒரு பிரதியையுந் தந்துதவினர்கள்.

'கல்வி ஒழுக்கம்' என்ற நூலினைத் *தமிழ்ப் பேரறிஞர்கள் வேறு பலரும் பார்த்ததில்லை எனத் தெளிந்ததால் இந் நூலினை இரண்டாம் பதிப்பாக வெளியிடவேண்டும் என்ற ஆசை மிகுத்தது, அதன் விளைவே இப் பதிப்பு.

தமிழகத்துப் பேரக்குழந்தைகட்கும் பெரியோர்கட்கும் கல்வியின் மாண்பினைப் பெரிதும் எடுத்தோதும் இந் நூலினை இரண்டாம் பதிப்பாக வெளியிடத் திருவருள் கைகூடியதைக் கண்டு இறும்பூதெய்தி இறையருளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

வெண்பா

பேரக் குழந்தைகளின் பேரார்வங் காரணமாய்
ஆர்வமுட னிப்பதிப்பை அச்சேற்ற — ஓர்மமுடன்
முன்வந் தமைகண்டு மூதறிஞர் வள்ளுவரோ
பன்னும் பயனேக்கிப் பார். 1

பேச்சுத் திருத்தமிலாப் பேரக் குழந்தைகளின்
எச்சுக் கிடையே யினியமென்சொல் — நாச்சேறியச்
சொல்லிவைக்கு மாசைமிகத் தூண்டியதா லிப்பதிப்பை
வல்லை வரவழைத்தேன் வாழ். 2

கற்றேரும் மற்றேரும் கண்டதில்லைக் கேள்வியென்று
முற்றுரைத்த வாசகத்தை முன்னேர்ந்து — பற்றுடனே
அச்சேற்றிக் கண்ட அருநூலைக் காத்திடவே
இச்சைசெய்த வேலை யிது. 3

ஆனந்த நிலையம்,
கரவெட்டி, யாழ்ப்பாணம்.
6-6-68

க. குழந்தைவேலு
Regd. Medical Practitioner

* தனிப்பாடல் திரட்டு (1964) பக். 26.

## சிறப்புக்கவி



புலோலி

ஆரியதிராவிட மகாவித்துவாம்சர்

**பிரமஸ்ரீ ம. முத்துக்குமாரசாமிக் குருக்கள்**

*அவர்கள் சொல்லியவை*

ஒளவைப் பிராட்டிநற் கல்வி யொழுக்க மருளுமுறை
செவ்விதி னுய்ந்துரை செய்தச்சி லோங்கத் திகழுவித்தான்
சைவன் கரவைப் பதியன்பொன் னம்பலஞ் சாற்றுபெயர்
எவ்வமின் மன்னர் மதிக்கு முபாத்தியா யேந்திரனே.

உ

சிவமயம்

# முதலாம் பதிப்பின் முகவுரை

தெய்வப்புலமை ஔவையாரா லருளிச்செய்யப்பெற்ற கல்வி ஒழுக்கம் என்னும் நூலின் மூலபாடம் ஏட்டுப்பிரதிகளிலுள்ள கரலிகிதவழுக்களைந்து ஒருரையியற்றி வெளியிடலானேன். சொற்குற்றம், பொருட்குற்றம் முதலியன காணப்படில் அறிஞராயுள்ளோ ரறிவித்தால் நன்றியறிதலோடேற்று மறுபதிப்பில் வெளியிடுவேன்.

"குற்றங் களைந்து குணமளைந்து கொண்டாடல்
கற்றறிந்த மாந்தர் கடன்."

இங்ஙனம்

அரசினர் பாடசாலை, — க. பொன்னம்பலம்
A. திவுளானை. — தலைமை உபாத்தியாயர்



# நூற்சிறப்புப்பாயிரம்

**கட்டளைக் கலித்துறை**

கல்வி ஒழுக்கந் திருத்தி யுரையது காணலுறச்
செல்வ விநாயக வீச னுமைகுகன் சேமுகவன்
நல்லருள் சைவ சமயசந் தானத்து நாற்குரவர்
எல்லுரை நூல்சொல் லிறைவரை வாணியொ டேத்துவனே.

# தெய்வப்புலமை ஔவையார்

## சரித்திரச் சுருக்கம்

ஔவையார் சரசுவதியின் அவதாரமென்ப. கருவூர் ஆதியென்பாள் வயிற்றிற் பகவன் என்னும் பிராமணர்க்குப் புத்திரியாகப் பிறந்து நரப்புக்கருவியோர் நண்ணிடுசேரியிற் பாணரகத்தி லவ்வை வளர்ந்தனள் என்பதனுல் பாணர் சேரியில் வளர்ந்துவந்தனர். ''இல்லறமல்லது நல்லறமன்று'' என்று கூறினுராயினும் பிரமசரியவிரதத்தை அனுட்டித்து வந்தனர். ஆத்திசூடி, கொன்றைவேந்தன், கல்வி யொழுக்கம், நீதிவெண்பா, வாக்குண்டாம், நல்வழி, விநாயகரகவல், பந்தனந்தாதி, அசதிக்கோவை, நன்னூற்கோவை, நான்மணிக்கோவை, அருந்தமிழ்மாலே, தரிசனப்பத்து, ஞானக்குறள், பிடகநிகண்டு முதலிய நூல்களேப் பாடினர். ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்னுமிரண்டு நூலினேயும் டாக்டர் ஜோன் என்பவரும் றெவறெண்டு பிஸ்ஸெட் என்பவரும் சட்சென் என்பவரும் ஆகிய ஆங்கிலர் மூவரும் வியந்து இங்கிலீஷ்பாஷையில் மொழிபெயர்த்திருக்கின்றனர். அன்றி *ஜர்மனியரும், உலாந்தாக்காரரும் தத்தம் பாஷையில் மொழிபெயர்த்திருக்கின்றனர். இவர் அதிகமான் வஞ்சியினுற் கொடுக்கப்பட்ட அமிழ்து விளேயும் கருநெல்லிப் பழத்தைப் புசித்து அநேககாலம் வசித்திருந்தனர் எனத் தெரிகிறது. இவர் பற்பல தனிப்பாடல்களேப் பாடினர். கணபதிபூசை செய்து அவர் துதிக்கையால் கைலேயில்விட அங்கு,

''மதுர மொழிநல் லுமையாள் மைந்தன் மலர்ப்பதத்தை
முதிர நினேவார்க் கரிதோ முகில்போன் முழங்கி
அதிர நடந்திடும் யானேயுந் தேரு மதன்பின்வரும்
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே.''

என்ற பாடலேப் பாடி வாழ்ந்திருக்கின்றனராம்.

---

*இக் கல்வி ஒழுக்கத்தை ''வான்ருதின்'' ஜெர்மன் மொழியில் மொழி பெயர்த்திருப்பதாக 1966ஆம் ஆண்டு ''கலேமகள் தீபாவளி மலரில்'' 'ஔவையார்' என்னும் தலேப்பில் ம. பொ. சி. அவர்கள் எழுதியுள்ளார்.

உ

கணபதி துணை

தெய்வப்புலமை ஒளவையாரருளிச்செய்த

# கல்வி ஒழுக்கம்

## மூலமும் உரையும்



1. அஞ்சு வயதி லாதியை யோது.

இதன் பொருள்: ஆதியை—கடவுளை, அஞ்சு வயதில்—ஐந்தாமாண்டில், ஓது — நீ ஓதுதல்செய் என்றவாறு. (1)

2. ஆதியை ஓத அறிவுண் டாமே.

இ - ள்: ஆதியை—கடவுளை முன்னிட்டு, ஓத—ஓதுதல் செய்ய, அறிவுண்டாம் — அறிவுதோன்றும் எ - று. ஏகாரம் - ஈற்றசை. (2)

3. இனியது கொடுத்து எழுத்தைத் தானறி.

இ - ள்: இனியது கொடுத்து-இனிய பொருள் முதலியவற்றை (ஆசானுக்குக்) கொடுத்து, எழுத்தை — அக்ஷரலக்ஷணம் முதலிய வித்தைகளை, அறி — நீ கற்றுக்கொள் எ - று. தான் - அசை. (3)

4. ஈட்டிய நற்பொரு ளெழுத்தே யாகும்.

இ - ள்: ஈட்டிய - ஒருவன் சம்பாதித்த, நற்பொருள் - நல்லபொருளாவது, எழுத்து ஆகும் — கல்விப் பொருளாகும் எ - று. ஏகாரம் - அசை. (4)

5. உடைமை யென்பது கல்வி யுடைமை.

இ-ள்: உடைமை என்பது — ஒருவனுக்குப் பொருள் என்று சொல்லப்படுவது, கல்வி உடைமை — கல்விப் பொருளேயாம் எ - று. (5)

6. ஊமை யென்பவ ரோதா தவரே.

இ-ள்: ஊமை என்பவர் — ஊமையென்று சொல்லப் படுபவர், ஓதாதவர்— நல்ல நூல்களை வாசியாதவர் எ - று. ஏகாரம் — ஈற்றசை. (6)

7. எழுதப் படுவ தெழுத்தே யாகும்.

இ-ள்: எழுதப்படுவது — எழுதுதல் செய்யப்படுவது, எழுத்தே ஆகும் — அட்சரங்களேயாகும் எ - று. ஏகாரம் — அசை. (7)

8. ஏழை யென்பவ ரெழுத்தறி யாதவர்.

இ-ள்: ஏழை என்பவர்—அறிவிலாரென்பவர், எழுத் தறியாதவர் — கல்வி கல்லாதவர் எ — று. (8)

9. ஐய மேற்கினு மறிவ தெழுத்தே.

இ—ள்: ஐயம் ஏற்கினும் — பிச்சையெடுத்தாலும், அறிவது — தெரியப்படுவது, எழுத்து — எழுத்தாகும் எ - று. ஏகாரம் - அசை. (9)

10. ஒருபொழு தாயினு மோதி நன்கறி.

இ—ள்: ஒருபொழுது—ஒருகாலம், ஆயினும்—ஆனாலும், ஓதி நன்கு அறி — நீ அறிவுநூல்களை வாசித்து நன்றாயறிந்து கொள் எ — று. (10)

11. ஓத லுடைமை வேத வித்தை.

இ—ள்: வேத வித்தை — இறைவனாலருளிச் செய்யப் பட்ட வேதம் முதலாகிய வித்தைகளே, ஓதலுடைமை — ஓதுதற்குரியனவாம் எ - று. (11)

12. ஔவியம் பேசா ராமெழுத் தறிந்தோர்.

இ - ள்: ஔவியம்—பொறாமைச் சொற்களை, எழுத்து அறிந்தோர்—கல்விகற்றறிந்தவர், பேசார்—பேசார் எ—று. ஆம் - அசை. (12)

13. கண்ணுடை யவர்கள் கற்றவர் தாமே.

இ - ள்: கண்ணுடையவர்கள்—கண்பொருந்தியவர்கள், கற்றவர் தாம் — அறிவுநூல்களை வாசித்தவர்கள் ஆகும் எ - று. ஏகாரம் - ஈற்றசை. (13)

14. காவல ரெனினும் கணக்கை யோர்ந்தறி.

இ - ள்: காவலரெனினும் — அரசர்களாகுலும், கணக்கை — எண்ணையு மெழுத்தையும், ஓர்ந்து அறி — நீ நன்முகக் கற்றறி எ - று. காவலனெனினும் என்றும் சில பிரதிகளிலிருக்கிறது. (14)

15. கிடையா வுடைமை கல்வி யுடைமை.

இ - ள்: கிடையா உடைமை—கிடைத்தற்கரியபொருள், கல்வி உடைமை — கல்விப்பொருளேயாம் எ - று. (15)

16. கீர்த்தியும் பெருமையுங் கிடைப்பது கல்வி.

இ - ள்: கீர்த்தியும் பெருமையும் — புகழையும் மேன்மையையும், கிடைப்பது—அடையச் செய்வது, கல்வி—கல்விப் பொருளேயாம் எ - று. (16)

17. குறைவறக் கற்றவன் கோடியி லொருவன்.

இ - ள்: குறைவறக் கற்றவன்—நன்முகக் கற்றவன், கோடியில் ஒருவன்—கோடிபேருள் ஒருவனும் எ - று. (17)

18. கூர்மை யென்பது குன்றுக் கல்வி.

இ - ள்: கூர்மை என்பது—அறிவு என்று சொல்லப் படுவது, குன்றுக்கல்வி—குறையாத கல்வியுடைமையேயாம் எ - று. (18)

19. கெடுப்பினுங் கல்வி கேடு படாது.

இ - ள் : கெடுப்பினும்—பிறராற் கெடுக்கப்படினும், கல்வி கேடுபடாது—கல்விப்பொருள் அழியாது எ - று. (19)

20. கேண்மை யுடைமை தாழ்விலாக் கல்வி.

இ - ள் : கேண்மையுடைமை — ஒருவனுக்குச் சினேக முடைமை, தாழ்விலாக்கல்வி—குறையாத கல்விப்பொருளை யுடையனுயிருத்தலாம் எ - று. (20)

21. கைப்பொரு ளென்பது கசடறு கல்வி.

இ - ள் : கைப்பொருள் என்பது—கையிலுள்ள பொரு ளென்று சொல்லப்படுவது, கசடறு கல்வி — குற்றந்தீரக் கற்றலாகும் எ - று. (21)

22. கொற்றவன் றன்னிலும் கற்றவ னுயர்ந்தவன்.

இ – ள் : கொற்றவன் தன்னிலும் — அரசனிலும், கற்றவனுயர்ந்தவன்—கல்விகற்றவன் மேம்பட்டவன் எ -று.

23. கோதறு கல்வி குவலயந் தருமே.

இ – ள் : கோதறு கல்வி — குற்றந்தீரக் கற்ற கல்வி யானது, குவலயந்தரும் — பூமியைத் தரும் எ - று. (23)

24. சகல கலைக்குந் தலைமை யெழுத்தே.

இ – ள் : சகல கலைக்கும்—சகல கலைகளுக்கும், தலைமை – முதன்மை, எழுத்து—அட்சரம் எ – று. ஏகாரம் - ஈற்றசை.

25. சாத்திரங் கற்றவன் றன்னை யறிந்தவன்.

இ - ள் : சாத்திரங் கற்றவன் — வேதமுதலாகிய பதி நூல்களைக் கற்றவன், தன்னையறிந்தவன் — தன்னைத் தெரிந் தவனாகும் எ – று. (25)

26. சிறுமையிற் கல்வி சிலையி லெழுத்தே.

இ - ள் ; சிறுமையிற் கல்வி—சிறு வயதிற் கல்வியுடைய னாதல், சிலையில் எழுத்து—கல்லில் எழுதிய எழுத்துப்போ லாகும் எ – று. ஏகாரம் - ஈற்றசை. (26)

27. சீரிய தமிழைத் தெளிய வோது.

இ - ள்: சீரிய தமிழை — நல்ல தமிழை, தெளிய வோது—நன்ருக நீ கற்றறி எ - று. (27)

28. சுற்ற மென்பது துகளறு கல்வி.

இ-ள்: சுற்ற மென்பது-இனமென்று சொல்லப்படுவது, துகளறு கல்வி—குற்றந்தீர்ந்த கல்வியுடையனுதல் எ - று.

29. சூக்கமுந் தூலமுந் தோன்றக் கற்றறி.

இ - ள்: சூக்கமும்—ஞானமும், தூலமும்—கிரியையும், தோன்றக் கற்றறி—தெரிய நீ கற்றறி எ - று.

சூக்கம் — நுண்பொருள். தூலம் — பருப்பொருள். என்பது ஒன்று. (29)

30. சென்றிட மெல்லாம் சிறப்பே கல்வி.

இ - ள்: சென்றிட மெல்லாம்—போனவிடமெல்லாம், சிறப்பே கல்வி—சிறப்பைத்தருவது கல்வி எ - று. (30)

31. சேயன் என்பவன் தீங்கறக் கற்றவன்.

இ - ள்: சேயன் என்பவன்—சேயன் என்று சொல்லப் படுபவன், தீங்கறக் கற்றவன்—குற்றந்தீரக் கற்றவன் எ - று.

32. சைகையுஞ் சமர்த்துந் தந்திடுங் கல்வி.

இ - ள்: சைகையும் — பழக்கத்தையும், சமர்த்தும்— திறமையையும், கல்வி தந்திடும் — கல்விப்பொருள் (ஒருவ னுக்குக்) கொடுக்கும் எ - று.

சைகை என்பது குறிப்பு என்றும் ஒரு பொருள் கொள்ளலாம். (32)

33. சொல்லும் பொருளுந் தோன்றக் கற்றறி.

இ - ள்: சொல்லும் பொருளும்—சொல்லையும் பொரு ளையும், தோன்ற—தெரிய, கற்றறி—நீ படித்தறி எ - று.

34. சோம்ப ரென்பவர் சொல்லெழுத் தறியார்.

இ - ள்: சோம்பரென்பவர்—சோம்பலுடையவ ரென்பவர், சொல்லெழுத்தறியார்—சொல்லப்பட்ட எழுத்தை யறியாதவர் எ - று. (34)

35. தகுமெழுத் தறிந்தவன் தலைவ னுவன்.

இ - ள்: தகுமெழுத்து — தகுதியாகிய எழுத்தை, அறிந்தவன்—தெரிந்தவன், தலைவன் ஆவன்—குருவாகுவன் எ – று. (35)

36. தான்கற் றவற்றைச் சபைதனி லோது.

இ - ள்: தான்கற்றவற்றை—தான்கற்ற நூற்பொருள் களை, சபைதனில் ஓது — கற்ருேரிருக்கும் சபையின்கண்ணே நீ ஒதுதல்செய் எ – று. (36)

37. திருந்த வோதத் திறமுண் டாமே.

இ - ள்: திருந்த — நன்ருக, ஒத — படிக்க, திறமுண் டாம் – சாமர்த்தியமுண்டாம் எ - று. ஏகாரம் ஈற்றசை.

38. தீரக் கற்றவன் தேசிக னுவன்.

இ - ள்: தீரக் கற்றவன்—நன்ருகக் கற்றவன், தேசிக னுவன் — குரு ஆகுவன் எ - று. (38)

39. துறவோ ரென்பவர் துரிசறக் கற்ருேர்.

இ - ள்: துறவோரென்பவர்–துறவோரென்று சொல்லப் படுபவர், துரிசறக் கற்ருேர்—குற்றந்தீரக் கற்றவர், ஆவர் எ – று. (39)

40. தூர்த்த ரென்பவர் சொல்லெழுத் தறியார்.

இ - ள்: தூர்த்தரென்பவர் — துட்டர் என்பவர், சொல்லெழுத்தறியார் — சொல்லையுமெழுத்தையு மறியா தவர் எ - று. (40)

41. தெளிய வோதத் திறமுண் டாமே.

இ - ள்: தெளிய வோத — நன்ருகக் கற்க, திறமுண் டாம் — சாமர்த்தியமுண்டாம் எ - று. (41)

42. தேசமும் நாடும் திருந்த வோது.

இ - ள்: தேசமும்—தேசங்களையும், நாடும்—நாட்டையும், திருந்தவோது — திருந்தும்படி நீ கல் எ - று. (42)

43. தைக்கக் கற்றவன் சமர்த்த னுவன்.

இ - ள்: தைக்க — மனம் அழுந்த, கற்றவன் — படித்தவன், சமர்த்தனுவன் — கெட்டிக்காரனுவன் எ – று.

44. தொன்னூல் முழுதுந் தோன்றக் கற்றறி.

இ - ள்: தொன்னூல் முழுதும் — பழய நூல் முழுதையும், தோன்ற—தெரிய, கற்றறி—நீ கற்றறிந்துகொள் எ-று.

45. தோழ னுவது சோர்விலாக் கல்வி.

இ - ள்: தோழனுவது — சினேகனுவது, சோர்விலாக் கல்வி — சோர்ச்சியற்ற கல்வியேயாம் எ – று. (45)

46. நற்பொருள் கொடுத்து நன்ரு யோது.

இ - ள்: நற்பொருள் கொடுத்து — நல்ல பொருளைக் கொடுத்து, நன்ருய் ஓது—நன்ருக நீ ஓதுதல்செய் எ - று.

47. நானில முழுதும் நயந்தருங் கல்வி.

இ - ள்: நானில முழுதும் — நான்குவகையான பூமி முழுவதிலும், நயந்தரும் — நயத்தைத்தருவது, கல்வி — கல்வியேயாம் எ - று. (47)

48. நீசரித் தாயினுங் கற்பது நிலையே.

இ - ள்: நீ சரித்தாயினும் — நீ பற்பலவிடங்கட்குச் சென்ருயினும், கற்பதுநிலை - கற்றுக்கொள்வது நிலையாகும் எ - று. ஏகாரம் - ஈற்றசை. (48)

49. நுண்பொருள் கொடுத்து நூல்பல தையுமறி.

இ - ள்: நுண்பொருள் கொடுத்து—நுண்ணியபொருள்களை (ஆசிரியனுக்குக்) கொடுத்து, நூல்பலதையுமறி — நீ பல நூல்களையுங் கற்றுக்கொள் எ - று. (49)

50. நூருண் டாயினுங் கல்வியை நோக்கு.

இ-ள்: நூருண்டாயினும் — நூறு வயதானலும், கல்வியை நோக்கு — நீ கல்வியை விரும்பு எ-று. (50)

51. நெடுங்கட லோடினும் நிலையே கல்வி.

இ-ள்: நெடுங்கடல் ஓடினும் — கரையையடுத்த கடலில் ஓடிப்போனலும், கல்வி நிலை—கல்வி நிலையேயாகும் எ-று. (51)

52. நேராக் கல்வி நிலையா காதே.

இ-ள்: நேர் ஆக் கல்வி — உண்மையாய்க் கற்காத கல்வி, நிலையாகாது — நிலையாகமாட்டாது எ-று. மனம் உடன்பட்டுக் கற்காத கல்வி என்னலும் ஒருபொருள். (52)

53. நைய வருகினும் நொய்ய நன்கறி.

இ-ள்: நையவருகினும்—மெலியவருகினும், நொய்ய நன்கறி — நீ இலேசாக நல்லாய்க் கற்றுக்கொள் எ-று.

54. நொந்தறி யாதவர் செந்தமிழ் கற்ருேர்.

இ-ள்: நொந்து அறியாதவர்—வருந்தி அறியாதவர், செந்தமிழ் கற்ருேர் — இயற்றமிழைக் கற்றவர்கள் எ-று.

55. நோகா துண்பவர் நுண்பொருள் அறிந்தோர்.

இ-ள்: நுண்பொருள் அறிந்தோர் — நுட்பமான கருத்தை அறிந்தவர், நோகாதுண்பவர் — வருத்தமுருது சீவிப்பவராவர் எ-று. (55)

56. பலகலை கற்றவர் பகையைக் கைவிடு.

இ-ள்: பலகலை கற்றவர் — பலநூல்களைக் கற்றவர்களுடைய, பகையை — விரோதத்தை, கைவிடு — நீக்கிவிடு எ-று. (56)

57. பாவலர் என்பவர் பழுதறக் கற்ருேர்.

இ - ள்: பாவலர் என்பவர்—பாக்களில்வல்லவர் என்று சொல்லப்படுபவர், பழுதறக்கற்றவர்—குற்றந்தீரக் கற்றவர் ஆவர் எ - று. (57)

58. பிழையறக் கற்றவர் பெரியவர் தாமே.

இ - ள்: பிழையறக்கற்றவர் — குற்றந்தீரக் கற்றவர், பெரியவர் தாமே—பெரியவராகும் எ-று. தாம், ஏ அசைகள்.

59. பீடுஞ் செல்வமும் பெறத்தருங் கல்வி.

இ - ள்: பீடும் — பெருமையும், செல்வமும்— பாக்கியமும், பெறத்தரும் கல்வி — பெறும்படி தருவது கல்வியேயாம் எ - று. (59)

60. புரையறக் கற்றவர் புவியாள் பவரே.

இ - ள்: புவியாள்பவர் — பூமியைப் பரிபாலனஞ் செய்வோர், புரையறக் கற்றவர் — குற்றந்தீரக் கற்றவராவர் எ—று. ஏகாரம்-ஈற்றசை. (60)

61. பூமியிற் செல்வம் புகழ்பெறுங் கல்வி.

இ - ள்: பூமியில் செல்வம் — நிலவுலகிலுள்ள செல்வமாவது, புகழ் பெறுங் கல்வி — கீர்த்தியைத் தருங் கல்வியேயாம் எ – று. (61)

62. பெருமை பெறுவது பேசருங் கல்வி.

இ – ள்: பெருமை பெறுவது — மேன்மையைத் தருவது, பேசரும் கல்வி — சொல்லுதற்கரிய கல்வியேயாம் எ – று. (62)

63. பேதை யென்பவர் பெருநூ லறியார்.

இ – ள்; பேதை என்பவர் — அறிவிலா ரென்பவர், பெருநூல் அறியார் — பெரிய நூல்களை அறியாதவர் ஆவர் எ - று. (63)

64. பையப் பையப் படித்தே யொழுகு.

இ – ள்: பையப் பைய — மெல்ல மெல்ல, படித்து ஒழுகு — நீ கற்று நட எ - று. ஏகாரம் - அசை. (64)

65. பொருள்மிகக் கொடுத்துப் போதக் கற்றறி.

இ - ள்: பொருள் மிகக் கொடுத்து — ஆசானுக்குப் பொருளை மிகுதியாகக் கொடுத்து, போத — நிரம்ப, கற்றறி — நீ கற்றறிந்துகொள் எ - று. (65)

66. போதக் கற்றவன் புண்ணியஞ் செய்தவன்.

இ - ள்: போதக் கற்றவன் — நிரம்பக் கல்விகற்றவன், புண்ணியஞ் செய்தவன் — தருமஞ் செய்தவனவன் எ - று.

போதங்கற்றவன் – என்று சில பிரதிகளிற் காணப்படு கின்றது, போதம் - ஞானம். (66)

67. மன்ன ராயினு மறைகளை யோது.

இ - ள்: மன்னர் ஆயினும் — அரசர்களாயினும், மறைகளையோது — வேதங்களையோதுதல் செய்யவேண்டும் எ - று. (67)

68. மாசறக் கற்றவர் மாநில மாள்வார்.

இ - ள்: மாசறக் கற்றவர் — குற்றந்தீரக் கற்றவர், மா நிலம் ஆள்வார் — பெரியபூமியை ஆள்வார் எ – று.

69. மிகப்பெருஞ் செல்வம் விளைத்திடுங் கல்வி.

இ - ள்: கல்வி — கல்வியானது, மிகப்பெருஞ்செல்வம் மிகப்பெரிதாகிய செல்வத்தை, விளைத்திடும்—உண்டாக்கும் எ – று. (69)

70. மீசுரக் கொடுத்து வித்தையைக் கற்றறி.

இ - ள்: வித்தையை—வித்தைகளை, மீசுரக்கொடுத்து— அதிகமாகப் பொருளை (ஆசிரியனுக்குக்) கொடுத்து, கற்றறி— நீ படித்தறி எ - று. (70)

71. முத்தமிழ் தனக்கு மூப்பு மில்லை.

இ - ள்: முத்தமிழ் தனக்கு — இயலிசை நாடகமென் னும் மூன்று தமிழைக் கற்றற்கு, மூப்புமில்லை — முதுமை யென்பது இல்லை எ - று. (71)

72. மூதறி வுயர்த்துந் தீதிலாக் கல்வி.

இ – ள்: தீதிலாக்கல்வி — நற்கல்விகள், மூதறிவுயர்த்தும் — பேரறிவிற் றலையுறச்செய்யும் எ – று. (72)

73. மெல்லியரெனினும் வேண்டுவதெழுத்தே.

இ - ள்: எழுத்து — கல்வி, மெல்லியரெனினும் — பெண்களாயினும், வேண்டுவது — விரும்புவதாகும் எ—று.

74. மேலோர் என்ன வித்தையைக் கற்றறி.

இ - ள்: மேலோர் என்ன — பெரியோரென்று சொல்லும்படி, வித்தையைக் கற்றறி — நீ வித்தைகளைக் கற்றறிந்துகொள் எ - று. (74)

75. மையறு கல்வியார் மாநில மாள்வார்.

இ – ள்: மையறு கல்வியார்-மயக்கம்நீங்கிய கல்வியையுடையார், மா நிலம் ஆள்வார் — பெரிய பூமியை ஆள்பவராவர் எ - று. (75)

76. மொழிவ தகார முதலெழுத் தாமே.

இ – ள்: மொழிவது–சொல்லப்படுவது, அகார முதல் எழுத்தாம், — அகரம் முதலாகிய எழுத்துக்களாம் எ – று. ஏகாரம் – ஈற்றசை. (76)

77. மோக விகாரர் முன்னூல் பாரார்.

இ – ள்: மோகவிகாரர் — மயக்கம்பொருந்திய வேறுபட்ட குணமுடையோர், முன்னூல் பாரார் — பழைய நூல்களைப் பார்க்கமாட்டார் எ - று. (77)

78. வஞ்சக மோதார் நெஞ்சுறக் கற்றோர்.

இ - ள்: நெஞ்சுற கற்றோர் — மனமமையக் கற்றறிந்தவர், வஞ்சக மோதார் — கபடவார்த்தைகளைப் பேசமாட்டார் எ - று. (78)

79. வாட்டந் தராது மறவாக் கல்வி.

இ – ள் : மறவாக்கல்வி—மறவாத கல்வியுடைமை, வாட்டந் தராது — சோர்வுதரமாட்டாது எ – று. (79)

80. வித்தைகல் லாதவர் வெறியர் ஆவர்.

இ – ள் : வித்தை கல்லாதவர்—கல்வியைக் கற்காதவர், வெறியர் ஆவர் — பித்தராவர் எ - று. (80)

81. வீரியம் பேசார் வித்தை யறிந்தோர்.

இ - ள் : வித்தை அறிந்தோர்—வித்தைகளையறிந்தவர், விரியம் பேசார் — வீரம் பேசமாட்டார் எ - று. (81)

82. வெண்பா முதலாய் விளங்க வோது.

இ – ள் : வெண்பா முதலாய்—வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா முதலாகிய பாவினங்களை, விளங்க ஒது — நீ விளங்கும்படி ஒதுதல் செய் எ – று. (82)

83. வையக மெல்லாம் வாழ்த்தவே யோது.

இ - ள் : வையகம் எல்லாம் — பூமியிலுள்ளார் யாவரும், வாழ்த்த ஒது — வாழ்த்துதல்செய்ய நீ ஒதுதல் செய் எ - று. ஏகாரம் — அசை. (83)

84. வௌவிப் படிக்க வாழ்வுண் டாமே.

இ – ள் : வௌவிப் படிக்க - நூல்களை மனதில் ஊன்றிக் கற்க, வாழ்வுண்டாம் — நித்தியானந்தப் பெருவாழ் வுண்டாகும் எ – று. ஏகாரம் — ஈற்றசை. (84)

கல்வி ஒழுக்கம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

---